யிலுள்ள மதுரையில் தங்கி மகிழ்ந்து அங்கே கல்வி பெற முடியும் என்று நினைக்கும்போது நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம். எனவே இந்தப் பல்கலைக்கழகத்தை விரைவில் தோற்றுவிக்க விருக்கும் நம் அமைச்சரவைக்கு அந்த மக்களின் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

இந்தப் பல்கலைக்கழகத்திற்கு என்ன பெயர் வைக்கலாம் என்பது பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இது மதுரைப் பல்கலைக் கழகம் என்று பெயரிடப்பட வேண்டுமா அல்லது பாண்டியன் பல்கலைக்கழகம் என்று பெயரிடப்பட வேண்டுமா என்று ஆராயப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். இது பற்றி இனிமேலும் ஆராயப்படக்கூடும். இந்தப் பல்கலைக்கழகத்தில் திருச்சி, தஞ்சை மாவட்டங்கள் சேர்க்கப்படவில்லை. எல்லையால் பாண்டிய நாட்டை சுட்டுகிறது. மதுரை என்ற சொல் தமிழ் என பொருள்படும். மதுரைப் பல்கலைக்கழகம் என்ற சொற்களில் பாண்டிய நாடு என்ற பொருளும், தமிழ் என்ற பொருளும் வருகின்றன. எனவே இதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் என்று பெயரிடலாம் என்பது என் கருத்து. தமிழ் பல்கலைக்கழகம் என்று பெயர் வைத்துவிட்டு அங்கே தமிழுக்கு முதலிடம் கொடுக்காமல் இருந்தால் பயனில்லை. என்ன பெயரிருந்தாலும் தமிழ் உயிர் அங்கு நிலவவேண்டும். இந்தப் பல்கலைக்கழகத்தில் தமிழ் மொழியில் பயிற்சி அளிப்பதற்கு முதலிடம் தர வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். தமிழ் மொழியின் மூலம் பயிற்சி அளித்தால் கல்வியின் தரம் குறையாது. அவ்வாறு பயிற்சி அளிக்கப்படாததால் தான் இன்று பல வருந்தத்தக்க விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன. வட இந்தியாவில் பல பல்கலைக்கழகத்தினர் பட்டம்—'டிகிரி'—கூட இந்தியிலேயே கொடுத்துவிடுகின்றனர். உத்கல் பல்கலைக்கழகத்தினர் பி. எல். பட்டத்தை இந்தியில் கொடுத்துவிடுகின்றனர். அதில் என்ன எழுதப்பட்டிருக்கிறது என்று நாம் தெரிந்துகொள்ள முடியவில்லை. அதன் காரணமாக அந்த ராஜ்யத்தவர்களுக்கு தேசப்பற்று குறைந்துவிட்டதாக நாமோ அவர்களோ கருதுவதில்லை. முதலில் தாய் மொழியை நன்றாகக் கற்றுக்கொண்டால் தான் நம் தாய் மொழிக்குப் பக்கத்து மொழியாகிய இந்தியைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் ஏற்படுமே தவிர ஆங்கிலத்தை கற்றுக்கொள்வதால் அந்த ஆர்வம் ஏற்படும் என்று எனக்குத் தோன்றவில்லை. எனவே இங்கே தமிழ் மொழிக்கு முதலிடம் கொடுக்க வேண்டும். இங்கே தமிழ் மொழி மூலம் பயிற்சி அளிக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். நாம் அவ்வாறு செய்தால் அதை மற்ற பல்கலைக்கழகங்களும் பின் பற்றக்கூடும்.

இந்தப் பல்கலைக்கழகத்தில் நம் தமிழ் நாட்டின் கலைத் திறன்கள் இடம் பெற வேண்டும். இங்கே நம் பண்பும் அறநெறியும் பாது காக்கப்பட வேண்டும். பொறுக்குக் குழுவுக்கு நியமிக்கப்படும் திறமை வாய்ந்தவர்கள் இதையெல்லாம் நன்கு ஆராய வேண்டும். மதுரைப் பல்கலைக் கழகம் உலகிலேயே முதலிடம் வகிக்கக்

4th August 1965] [திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை]

கூடிய சிறந்த பல்கலைக் கழகமாக அமைய வேண்டும். தென் மதுரையிலும் இன்றுள்ள மதுரையிலும் பிற நாட்டவர்கள் தமிழ் ஆராய்ந்தார்களாம்; அங்கே அவர்கள் கலை ஆராய்ந்தார்களாம். இன்றுள்ள மதுரையில் பிற நாட்டவரும் தமிழ் கற்க வாய்ப்பு இருக்க வேண்டும்.

இந்தப் பல்கலைக்கழகத்தின் பெயர் எப்படி இருந்தாலும், அது தமிழ்ப் பெயராக இருக்க வேண்டும் என்று சொல்லிக்கொள் கிறேன். இந்த சிறந்த மசோதாவைக் கொண்டுவந்தவர்களைப் பாராட்டுகிறேன். நாங்கள் அரசாங்கத்தை என்றும் நினைக்கச் செய்யும் விதத்தில் பல்கலைக்கழகம் அமைவதற்கு அரசாங்கம் வகை செய்யவேண்டும் என்று பொறுக்குக் குழுவினரைக் கேட்டுக் கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* திரு. என். வி. நடராசன் : கனம் துணைத் தலைவர் அவர்களே, தமிழக மக்கள் நீண்ட காலமாக எதிர்பார்த்திருந்த மதுரை பல்கலைக் கழகம் அமையப்பெறுவது குறித்து மகிழ்ச்சியடையாத வர்கள் யாரும் இருக்கமுடியாது. அந்த அளவுக்கு அதை கொண்டுவருவதில் முனைந்த சர்க்காரையும் கனம் முதலமைச்சர் அவர்களையும் நான் மனமார பாராட்டுகிறேன். இந்தப் பல்கலைக் கழகம் சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து பிரிந்து அமைகிறது என்றாலும் சென்னைப் பல்கலைக்கழகம் உலக மக்களால், உலகப் பெரு அறிஞர்களால் பாராட்டப்பட்ட பல்கலைக்கழகம் என்பதை யாரும் மறந்துவிடுவதற்கு இல்லை. அதிலிருந்து பிரிந்து அமையும் படியான மதுரை பல்கலைக்கழகம் இந்த சென்னைப் பல்கலைக் கழகத்தில் எந்தெந்த சிறப்புகள் இருந்தனவோ அந்த சிறப்புகளை யெல்லாம் தன்னகத்தே கொண்டு மேலும் புதிய சிறப்புகளையும் பெற்று முழுமைபெறவேண்டுமென்று உளமாற நான் ஆசைப் படுகிறேன். இங்கே கனம் உறுப்பினர் திரு. சுந்தரம் அவர்கள் மதுரை சங்கம் கண்ட நகர் என்று எடுத்துக் கூறினார்கள். அந்த சங்கம் கண்ட அந்த மதுரையை மீண்டும் நாம் வழக்கத்தில் கொண்டுவரவேண்டும், நினைவில் கொள்ளவேண்டும். மதுரை பல்கலைக் கழகம் என்பதை மதுரைச் சங்க பல்கலைக்கழகம் என்று நாம் அமைத்தால் சங்கம் என்ற சொல் சங்கம் கண்ட மதுரை யையும் குறிக்கும். எதிர்கால சந்ததியாரும் அதைக்கண்டு பெருமைப்படுவார்கள் என்பது என்னுடைய தாழ்மையான அபிப் பிராயம். இதற்கு முன்பாக அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அமயப்பெறும்போது கூட அண்ணாமலை தமிழ் பல்கலைக்கழகம் என்று அமைக்கவேண்டுமென்று சர்க்காரைக் கோரியதாகத் தெரிகிறது ஆனால் அது அண்ணாமலைப் பல்கலைக்கழகம் என்றே அமைந்துவிட்டது. இப்போது மதுரை சங்க பல்கலைக்கழகம் என்று அமைத்து ஆங்கிலத்திலும் அதைப்போலவே மதுரை சங்கப் பல்கலைக்கழகம் என்று அமைந்தால் சிறப்பாக இருக்கு மென்று எண்ணுகிறேன். சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு தற்போது இணைந்திருக்கும் சில இந்திய மொழி கல்லூரிகள் எல்லாம் மதுரைப் பல்கலைக்கழகத்தில் தொடர்பு கொள்ளுமானால்

இன்னும் வரவேற்கக்கூடியதாக இருக்கும். அந்தப் பல்கலைக் கழகத்திற்கும் சிறப்பு ஏற்படும். உறுப்பினர்கள் எடுத்துக் கூறியதுபோல தமிழ் உயர்வடைய வளர்ச்சி பெறத்தக்க வகையில் அமையவேண்டுமென்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன். அமையப்போகும் பல்கலைக்கழகம் கனம் உறுப்பினர் சுந்தரம் அவர்கள் குறிப்பிட்டதுபோல தேசியப் பற்று கொண்டதாக அமையவேண்டுமென்பதில் யாருக்கும் ஆட்சேபம் இருக்க முடியாது. சென்னைப் பல்கலைக்கழகம் நூறுண்டு காலமாக வளர்த்துவரும் தேசிய நோக்கம் கொண்டவர்களையும் ஆற்றல் மிக்க கல்வி மேதைகளையும் உருவாக்கி வருகிறது. அந்த பல்கலைக் கழகத்திலிருந்து பிரிந்து மதுரை பல்கலைக்கழகம் அமைவதால் அந்த சிறப்புகளுடன் அது வளரும் என்று நான் கருதுகிறேன். மதுரைப் பல்கலைக்கழகத்தில் தமிழுக்கு முதலிடம் தரப்பட வேண்டும். நம்முடைய தாய் மொழிக்கும் அதன் வளர்ச்சிக்கும் முக்கிய இடம் தரவேண்டுமென்பது என் எண்ணமாகும். மற்ற மொழிகளைப் புறக்கணிக்க வேண்டுமென்பதல்ல. தமிழ் கல்லூரி போதனு மொழியாக அமைக்கப்படுவதாக சர்க்கார் கூறிவருகிறது. எனவே அதை நடைமுறையில் கொண்டு வர மதுரைப் பல்கலைக் கழகம் அமையும் என்றும் அதற்குத் துணையாக அது இருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு இதை உருவாக்கிய முயற்சி யில் ஈடுபட்ட சர்க்காரை மீண்டும் பாராட்டி மதுரைப் பல்கலைக் கழகத்தை வரவேற்று மனதார அதற்கு வாழ்த்தினைக் கூறி விடை பெறுகிறேன்.

* **திரு. எம். எத்திராஜுலு:** உதவித் தலைவர் அவர்களே, இன்று கொண்டுவரப்பட்டிருக்கும் மதுரை சர்வகலாசாலை மசோதாவை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்போது தமிழ்நாட்டிலே மூன்றுவதாக வரக்கூடிய இந்த சர்வ கலாசாலை தமிழ் நாட்டிலுள்ள மக்களுக்கு பெரும் சந்தோஷத்தை உண்டாக்கியிருக்கிறது. அது மட்டுமல்ல. மதுரையில் அது ஆரம்பிக்கப் போகிறது என்று சொன்னபோது மக்கள் இரட்டை சந்தோஷம் அடைகிருர்கள். ஏனென்ருல், மதுரையில் புலவர்கள் மாற்றுப் பார்த்து, மார்க்கு போட்டு தகுந்தவர்களைத் தேர்ந் தெடுத்து கலைமகள் பீடத்தைக் கொண்ட மதுரை மாநகரில் இந்த சர்வகலாசாலை ஏற்படுவது மிகப்பொருத்தமானது என்றுதான் கருதுகிறேன். மேலும் கலைமகளுக்கு பிரதிநிதியாக இருக்கும் மீனுட்சியம்மன் எழுந்தருளியிருக்கும் மதுரையில் அந்த அம்மனின் அருளால் இந்த சர்வகலாசாலை ஏறக்குறைய சென்னை யை போல பெரும் பகுதியைக் கொண்ட மக்கள் அடங்கிய பிரதேசத்தில், வீரம் பொருந்திய பிரதேசத்தில் இந்த சர்வகலா சாலை ஏற்படுவது தமிழ்நாட்டிற்கே ஒரு பெருமை என்றுதான் சொல்லவேண்டும். இந்த சர்வகலாசாலையானது மூன்றுவது சர்வகலாசாலை. முதலாவது சர்வகலாசாலை சென்னையிலும் இரண்டாவது அண்ணுமலைநகர் சிதம்பரத்திலும் மூன்றுவது மதுரையிலும் வருகிறது. இப்போது நாம் அடிக்கடி பேசுகிறோம், அதிகாரங்களை ஒரேயிடத்தில் குவிந்துகொண்டே இருப்பதைத்

தவிர்த்து பரவலாக அதை கொண்டுவர வேண்டுமென்று அதற்கு ஒரு உதாரணமாகக்கூட மதுரை பல்கலைக்கழகத்தைச் சொல்லலாம். சென்னையிலுள்ள சர்வகலாசாலை வடக்கே கும்மிடிப்பூண்டியிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையில் அடங்கியது. 5-20 p.m. தங்களுடைய கல்லூரிகளின் காரியங்களைக் கவனிக்கவேண்டுமென்றால் மற்ற பகுதிகளிலிருந்து சென்னை வருவது என்பது எவ்வளவோ கஷ்டமாகவும் பணக்கஷ்டத்துடனும் தாமதமும் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. ஆகையால் சென்னை சர்வகலாசாலையின் அதிகார வரம்பை இரண்டாகப் பிரித்து மதுரையில் கொண்டுபோவது எவ்வளவோ பெரிய நல்ல வாய்ப்பு என்றுதான் சொல்லவேண்டும். மதுரை பல்கலைக் கழகத்தில் நான்கு ஜில்லாக்கள் அடங்கியிருக்கின்றன. இப்போதெல்லாம் பஞ்சாயத்துக்கள் முதற்கொண்டு பெரிய நகரங்கள் வரை எல்லோரும் தங்களுக்கு கல்லூரி ஏற்படுத்தும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். நமது முதலமைச்சர் அவர்கள் காலத்தில் எவ்வளவோ கல்லூரிகள் வந்துகொண்டிருக்கின்றன. கல்லூரிகள் பெருகிக்கொண்டுவரும்போது இந்தப் பல்கலைக்கழகம் அவசியமாகிறது. இருக்கின்ற சர்வகலாசாலைகள் போதாவென்று புதிதாக மதுரை சர்வகலாசாலை கொண்டுவரத்தான் வேண்டுமென்று அவர்கள் காலத்திலேயே இதைக் கொண்டுவருகிறார்கள். சிருக்காரன் சண்டை, சென்ற காலத்தில் இல்லாமல் இருந்தால், இந்தப் பல்கலைக்கழகம் முன்பே அமைக்கப்படவேண்டியது. சீன சண்டை ஒரு புறம் இருந்தாலும் என் காலத்தில் நான் இதைக் கொண்டுவருவேன் என்று முதலமைச்சர் அவர்கள் செய்தது பற்றி அவர்களை மக்கள் வாயார வாழ்த்துகிறார்கள். சர்வகலாசாலையைக் கொண்டுவருவது மட்டுமல்ல, எங்கள் ஊருக்குச் கல்லூரி வேண்டுமென்று கேட்கிறவர்களுக்கெல்லாம் உடனே ‘ஐந்து லட்சம் கையில் இருக்கிறதா, கொடுங்கள், உடனே கல்லூரி கொடுக்கிறோம்’ என்று உற்சாகப்படுத்திக் கொண்டு வருகிறார்கள். ஒரு லட்சத்தைக் கொடுத்துவிட்டு பாக்கியைக் கொடுக்காமல் ஏமாற்றிக் கொண்டு வருகிறவர்களுக்குக் கூட சலுகை காட்டிக் கொண்டு வருகிறார்கள். படிக்கிற பிள்ளைகள் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே போகிறார்கள். அதற்கு கல்லூரிகள் அதிகம் வேண்டுமென்பதை மனதில் வைத்துக்கொண்டுதான் வேண்டுமென்கிற இடங்களில் எல்லாம் கல்லூரியை எற்படுத்தி வருகிறார்கள். சடலூருக்கு வந்தபோது அவர்களைக் கேட்டோம். அங்கு ஒரு பெண்கள் கல்லூரி வேண்டுமென்றோம். உடனே அதை ஏற்பாடு செய்கிறேன் என்று எங்களுக்கு உறுதி கொடுத்துவிட்டார்கள்.

இன்னும் மற்றொரு பக்கத்தில், விழுப்புரம், விருத்தாசலத்தில் கல்லூரி கேட்டார்கள். 5 லட்சம் கொடுங்கள், விருத்தாசலத்தில் கொடுக்கிறேன் என்று சொன்னார்கள். ஏற்க்குறைய ஒரு கல்லூரிக்கு 30, 40 லட்சம் செலவானாலும்கூட, அதை எல்லாம் கருத்தில் எடுத்துக் கொள்ளாமல், தன் காலத்தில் லட்சக்கணக்கான பிள்ளைகள் படித்து முன்னேற வேண்டும், ஏழை, பின்

தங்கிய சமுதாயம் முன்னேறுவதற்கான வசதி செய்ய வேண்டும் என்று கல்லூரிகளைக் கட்டுக்கு அடங்காதபடி கொடுத்து வருவதைப் பார்க்கும் போது, நான் மிக மிக சந்தோஷப் படுகிறேன். ஆகவே அவர்கள் காலத்தில் இப்படியொரு கல்வி வளர்ச்சி ஏற்பட்டு இருப்பது தமிழகம் மறக்க முடியாத உண்மை. எதிர்காலத்தில் அவர்கள் பெயர் பொன்னால் பொறிக்கப்படும். மதுரைக்கு எப்படி பொற்காலம் ஏற்பட்டதோ, அதைப்போல் அவர்கள் பெயரும் எதிர்காலத்தில் பொன்னால் பொறிக்கப்படும் என்று சொல்லிக் கொள்கிறேன். நல்ல மாணவர்களை, ஏற்ற தரத்தோடு, தகுதியோடு, மதுரைப் பல்கலைக்கழகம் கொடுக்கும் என்று எதிர்பார்க்கிறோம். இந்த சர்வகலாசாலை வந்ததைக் கொண்டாவது, இப்போதுள்ள மாணவர்கள் தங்கள் தவறுகளைத் திருத்திக்கொண்டு, கெட்ட வழியில் செல்லாமல், மதுரைக்கு பல்கலைக் கழகம் வந்துவிட்டது என்ற பெருமிதத்தோடு, பெருமை யோடு நல்லவர்களாக மாற வேண்டும். அந்தப் பல்கலைக் கழகத்திலே வேலை செய்யும் ஆசிரியர்களும் மற்றவர்களும் நல்ல நோக்கத்தோடு நேஷனல் மைண்ட் அண்ட் ஸ்பிரிட்டோடு வேலை செய்யத்தக்க ஏற்பாடுகளை அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்தப் பல்கலைக் கழக மசோதாவை வரவேற்று முடிக்கிறேன். வணக்கம்.

**திரு. கே. எஸ். அப்துல் வஹாப்:** மதிப்புக்குரிய சட்ட மன்ற உப தலைவர் அவர்களே, மதுரை சர்வகலாசாலை துவக்கப்படக் கூடிய விவாதத்தில் பங்கு கொள்வதில் நான் பெருமைப்படு கிறேன். இது எல்லோராலும் உண்மையிலேயே பாராட்டப்படக் கூடிய ஒரு முயற்சி ஆகும். நாடு முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்கிறது. அதிலேயும் மின்சாரத் துறையிலும் கல்வித் துறையிலும் நம் மாகாணம் எந்த அளவு விருத்தியடைந்திருக் கிறதோ அந்த அளவுக்கு வேறு துறைகளில் இல்லை என்று சொல்ல லாம். எவ்வளவுக்கெவ்வளவு விருத்தி அடைகிறதோ அவ்வளவுக் கவ்வளவு பொறுப்புகள் ஒரே இடத்தில் இருந்தால் நிர்வாகக் குறைகள் ஏற்பட வகை ஏற்படும். ஆகவே பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுப்பதால் தான் திறம்பட நிர்வகிக்க முடியும் என்ற அடிப்படையிலேதான் இந்த சர்வகலாசாலை பொறுப்பை மதராஸ் சர்வ கலாசாலையிலிருந்து பிரித்து தனியாக தெற்குப் பகுதிகளுக்கு என்று அளிக்கப்படுகிறது என்று உணர்கின்றேன் இந்த விவாதத்தில் பேசிய சில உறுப்பினர்கள் சொல்லிய ஒரு கருத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாத நிலையைக் குறிப்பிடு கிறேன். மதுரை சர்வகலாசாலையுடன் திருச்சி, தஞ்சாவூர் ஜில்லாக்களை இணைத்து செயல்படுத்துவது நல்லது என்ற அபிப் பிராயம் சொல்லப்பட்டது. ஆனால் நமது முதலமைச்சர் அவர்கள் சொன்ன கருத்தை அனுசரித்துப் பார்ப்போமேயானால் திருச்சியை மையமாகக் கொண்டு மற்றொரு சர்வகலாசாலை வெகு விரைவில் உருவாக இருக்கிறது என்ற கருத்து தென்படுகிறது. அவர்களுடைய அந்தக் கருத்துக்கு நான் பாராட்டு தெரிவிக்

4th August 1965] [திரு. கே. எஸ். அப்துல் வஹாப்]

கிறேன். இந்த சர்வகலாசாலைச் சட்டத்தைப் பொருத்தமட்டில், ஜில்லாக்களையும் இணைத்து திருச்சியை மையமாக வைத்து, வேறொரு புது சர்வகலாசாலை துவக்குவதற்கு 2, 3 ஆண்டு களுக்குள் முயற்சி எடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள் கிறேன். இந்த சர்வகலாசாலைச் சட்டத்தைப் பொருத்தமட்டில், நான் படித்துப் பார்த்தேன்; அதிலே ஒரு அம்சம் எனக்கு அவ்வளவு திருப்தியளிக்கக் கூடியதாகக் காணவில்லை. இந்த சர்வ கலாசாலைக்கு, அண்ணமலை சர்வகலாசாலைக்கு உள்ளது போல வோ, மதராஸ் சர்வ கலாசாலைக்கு உள்ளது போலவோ, சுதந்திரம் இருப்பதாக நான் காண முடியவில்லை. இந்த சர்வகலாசாலையின் அடிப்படை "ரெயின்ஸ்" ஐ அரசாங்கம் தன் கையில் வைத்துக் கொண்டு இயக்க முற்படுகிறது என்று அறிகிறேன். குறிப்பாக இந்தச் சட்டத்தின் 83-வது பகுதியில் உள்ள "அப்பாயின்ட் மென்ட் ஆப் வைஸ் சான்சலர்" என்ற 10-வது ஷராவைக் குறிப் பிட விரும்புகிறேன். இதிலே கவர்னர் பெருமானார் மூன்று உறுப் பினர்கள் கமிட்டியிலேயிருந்து ஒருவரை வைஸ் சான்சலராக நியமிப்பார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த மூன்று பேர் கள் கொண்ட கமிட்டியிலே, இரண்டு பேர்கள் செனட்—சிண்டிகேட் சிபாரிசு செய்யக்கூடிய மெம்பர்களும், ஒரு மெம்பர் கவர்னர் தானே நியமிக்கக்கூடிய மெம்பருமாக, மூன்று பேர்களிலே இருந்து ஒருவரை அவர்கள் நியமிப்பார்கள் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த நிலையிலே கவர்னர் தான் விரும்பக்கூடிய யாரையும் எந்த ஒரு மூன்று வருஷத்துக்கும் ஒரே ஆளைத் திருப்பி திருப்பி நியமிக்க முற்பட்டால், தேர்ந்தெடுக்கக்கூடிய முறைக்கு வழியே இல்லாமல், சிண்டிகேட் சிபாரிசு செய்த மெம்பர் வரக் கூடிய வாய்ப்பு இல்லாமல் போகக்கூடிய நிலை இருக்கிறது. வைஸ் சான்சலர்தான் உயிர் நாடியான பொறுப்பு உள்ளவர். அரசாங்கம் நியமிக்கக்கூடியவர்தான் வரமுடியும் என்று இருந் தால், அந்த சர்வகலாசாலைக்கு மற்ற சர்வ கலாசாலைகளுக்கு உள்ளது போன்ற சுதந்திரம் இல்லை என்ற கருத்து தென்படுகிறது. இதைத் திருத்தியமைக்க முற்பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்: மன்றத் துணைத் தலைவர் அவர்களே, பழமைக்கும் பெருமைக்கும் வரலாற்றுக்கும் தெய்வி கத்துக்கும் பீடமாகிய மதுரை மாநகரில் அதன் பெருமைக்கேற்ப சிவபெருமானும் புலவர் பெருமக்களும் இருந்து தமிழ் ஆய்ந்த சங்கம் இருந்த இடத்தில் பல்கலைக்கழகம் அமைக்க அரசாங்கம் முன்வந்துள்ள செயல் மிகப் பெரிய போற்றுதற்குரிய செய்தி யாகும். அந்த மதுரையில் நாம் தொடங்க இருக்கிற பல்கலைக் கழகம் நம் மாநிலத்திலே மூன்றாவதாக இருந்தாலும், அது உலகத் திலே இருக்கிற பல்கலைக் கழகங்களிலே முதன்மையான பல்கலைக் கழகங்களில் ஒன்றாகப் போற்றப்படும் நிலைமையில் வளருவதற்கான சூழ்நிலையை அமைக்கும் பொறுப்பை அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று என் வேண்டுகோளாகச் சமர்ப்பிக்கிறேன். நாம் காலம் கடந்து தொடங்குவதால் இந்தக்

5-00 p.m.]

[திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்] [4th August 1965

காலத்துக்கு ஏற்ற முறையில் எந்தெந்த வாய்ப்புகள் எந்தெந்த பல்கலைக் கழகங்களில் புதிது புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அவற்றை எல்லாம் இந்தப் பல்கலைக் கழகத்தின் மூலம் பயிற்றுவித்து மாணவர்களைப் பண்புள்ள உலகத் தலைவர்களாக்கும் வழியில் செலுத்த வேண்டும் என்பதுதான் என் கருத்து. இப்போதுள்ள முறைப்படி பார்த்தால், பல நண்பர்கள் பேசினார்கள், படித்தவர்கள் இடத்தில் நாம் என்ன காணுகிறோம். வள்ளுவர் சொன்னார் :

" அறிவினால் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தந்நோய் போல் போற்றாக் கடை."

நாம் எல்லோரும் கற்றவர்கள், பெரியவர்கள், அறிஞர்கள் என்று பெருமைப்படுகிறோம். ஆனால் பிற உயிர்கள் கஷ்டப்படுவதை, துன்பப்படுவதைப் பார்த்தால், நமக்கு சம்பந்தம் இல்லாதவர்கள் ஏதோ வருந்திக் கொண்டிருக்கிறார்கள், அது அவர்கள் தலைவிதி என்று கண்ணை மூடிக்கொண்டு, வேறுபக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு போகிறவர்கள்தான் சமுதாயத்தில் தலைமக்களாக, சான்றோர்களாக, நாகரீகம் உள்ளவர்களாக மதிக்கப்படுகிற நிலை இருக்கும்போது, நாகரீகமான பரம்பரையைச் சார்ந்தவர்கள் நாம் என்று சொல்வதற்கு வெட்கித் தலை குனிய வேண்டியவர்களாக இருக்கிறோம். அதைத்தான் மீண்டும் போதிய அளவு வளர்க்கவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். அத்தகைய உயர்ந்த பண்புகளுக்கு அடிப்படையான கல்வியை வளர்ப்பதற்கு இந்த தமிழ்ச் சங்கமாகிய பல்கலைக்கழகம் முயற்சி செய்ய வேண்டும். அந்தப் பக்கத்தில் கேட்டுக் கொண்டது போல், இந்தப் பல்கலைக் கழகத்துக்கு தமிழ் உயிராகவும், பிற கலைகள் உடம்பாகவும் இருக்க வேண்டும். தமிழே நோக்கம் அல்ல. எல்லாக் கலைகளையும் போற்றி வளர்க்க வேண்டும். தமிழ் உயிராக இருக்க வேண்டும். நல்ல தமிழ் இலக்கியத்தைப் படித்தவர்கள் எல்லாம் உலகப் பெருமக்களாக ஏற்கப்பட வேண்டும். " யாதும் ஊரே யாவரும் கேளிர், ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் " என்று பேசிய பெருமக்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் எங்கே இருந்தார்கள் என்று தெரியவில்லை. இந்த நாளில் சில தமிழ் படித்தவர்கள், தங்கள் நாடு, தாங்கள்தான் தமிழர், மற்றவர்கள் வாழத் தகாதவர்கள் என்று கருதுவதால், தமிழ் படித்தவர்கள், தமிழ் கற்றவர்களைப்பற்றி தவறான கருத்து நிலவுவது வருந்தத்தக்கது. நான் கருதுவது என்னவென்றால், நமக்கு இப்போது சென்னைப் பல்கலைக்கழகத்தில் இருக்கிற தமிழ் புலவர் முறையிலே, தனித் தமிழ் வித்வான் என்று ஒரு பாடம் இருக்கிறது. அவர்களுக்கு தமிழ் மட்டும் தான் பாடம், வேறு எந்த மொழியும் தெரிந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. அதிலேகூட தமிழ் இலக்கணம் படித்தால் போதும். தற்காலத்துக்கு ஏற்ற விஞ்ஞானம், சரித்திரம் படித்தாக வேண்டுமென்ற கருத்து இல்லை. அதனாலே அவர்கள் காலத்தோடு பொருந்தாதவற்றைச் சிந்திக்கிறார்கள், தாங்கள் கற்றதைப் பெரிதாக எண்ணுகிறார்கள், நாட்டிலே நடந்த பலவித தீமைகளுக்கு இவர்கள்தான்

4th August 1965] [திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்]

தூண்டுகோலாக இருந்தார்கள் என்று நம்மில் பலர் நினைக்கிறோம். ஓரளவு உண்மை இருக்கலாம். முற்றிலும் உண்மையாக இல்லாவிட்டாலும், சிறிதளவாவது உண்மையாக இருக்கலாம். தமிழைத் தவிர மற்ற எதையும் கற்றுக் கொடுக்காதது நடைமுறையில் உள்ள தீமை. தனித் தமிழ் வித்வான் என்ற பகுதியை இந்தப் பல்கலைக்கழகத்திலிருந்து மாற்றி, பிற மொழிகளையும் கலைகளையும் கற்கும் வாய்ப்பை அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இப்போது பல தமிழ் எம்.ஏ.-க்கள் பேராசிரியர்களாக இருக்கிறார்கள். திருக்குறளையும் சாதாரண இலக்கணங்களையும் தெரிந்துகொண்டு கற்பிக்க முடியாத பல தமிழ் எம்.ஏ.-க்கள் தமிழ்ப் பேராசிரியர்களாக விளங்குவது இந்தத் தமிழகத்தின் பெரிய துரதிர்ஷ்டம். நான் இவ்வாறு சொல்வதை கனம் அங்கத்தினர்கள் தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாது என்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். தமிழ் எம்.ஏ. படிப்பவர்களுக்கு ஆங்கிலம் ஒரு பாடமாகத்தான் இருக்க வேண்டும். அவர்களுக்கு தமிழ் இலக்கணமும் இலக்கியமும் நன்றாகத் தெரியும் வகையில் பாடத் திட்டம் இருக்கவேண்டும். அந்த முறையில் படிக்காதவர்களுக்கு தமிழ் எம்.ஏ. என்று பட்டம் கொடுப்பது நியாயமல்ல. தமிழைப் பொருத்த வரையில் தமிழ் வித்வான் பட்டம் பெற்றவர்களையும் இப்போதுள்ள தமிழ் எம்.ஏ. பட்டம் பெற்றவர்களையும் சமமாகக் கருதுவது பொருத்தமல்ல. எனவே தமிழ் எம்.ஏ. படிப்பிற்கான இப்போதைய பாடத் திட்டத்தை தகுந்தபடி மாற்ற வேண்டும்.

தமிழ் எல்லா மொழிகளையும்விடப் பழமையான மொழி. "பண்டிதர் என்பவர் பதினெட்டுப் பாடைகளையும் கற்றுத் தேர்ந்தவர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. பண்டிதன் என்றாலோ, வித்வான் என்றாலோ, புலவன் என்றாலோ நன்றாகத் தேர்ந்தவன், எல்லாம் கற்றவன் என்று பொருள். ஆகவே தமிழ் மொழியை மட்டும் படித்தவன் அறிஞன் ஆகிவிட முடியாது. பதினெட்டு பாடைகளைப் படிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே, இந்த நாட்டிலுள்ள 14 மொழிகளைப் படிப்பதற்கும் ஐரோப்பாவிலுள்ள மிகச் சிறந்த மொழிகளின் ஆராய்ச்சிக்கும் மதுரைப் பல்கலைக்கழகத்தில் நாம் இடம் கொடுக்கவேண்டும்.

மதுரைப் பல்கலைக்கழகத்தில் நாடகக் கலைக்கு ஒரு பிரிவு வேண்டும் என்று மதிப்பிற்குரிய அங்கத்தினர் ஸ்ரீ சுந்தரம் சொன்னார். மதுரை மாநகரம் தமிழகத்திற்குப் பெருமை தருகிறது. அந் நகரிலுள்ள மீனாக்ஷி அம்மன் கோவில் கோபுரமும் அங்குள்ள வண்ண ஓவியங்களும் வெளியாரின் கருத்தைக் கவர்கின்றன. அவர்கள் அவைகளை ஓவியங்களாகத் தங்கள் ஊர்களில் சுவர்களில் காட்டிப் பெருமைப்படுகின்றனர். இது குறித்து நாமும் பெருமைப்படுகிறோம். இந்தப் பல்கலைக் கழகத்தில் சிற்பமும் ஓவியமும் போதிக்கப்பட ஏற்பாடு செய்ய வேண்டும். இருபது அல்லது 50 கோடி ரூபாய் செலவழித்தால்

தான் இதையெல்லாம் செய்ய முடியுமோ என்ற அச்சம் பொறுக்குக் குழுவிற்கு ஏற்படக்கூடும். அவ்வளவு பணம் செலவழித்தால் ஒரு குறையும் ஏற்படாது; அதில் ஒரு குற்றமு மில்லை என்பது என் அபிப்பிராயம். வரும் ஐந்தாண்டுத் திட்டத்தில் எத்தனையோ கோடி ரூபாய்கள் செலவழிக்கப்போகிறோம். அப்படி இருக்கும்போது கல்வித் துறையில் எவ்வளவு செலவழித்தாலும் அதனால் ஒரு குறையும் ஏற்படாது.

இற்றைக்கு அமைக்கும் மதுரை சர்வகலாசாலை உலகத்திலுள்ள எல்லாப் பாடங்களையும் தன்னகத்தே கொண்டதாக அமையவேண்டும். அதற்குரிய முறையில் பொறுக்குக் குழு சிந்திக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். இப்போது பேசுவதற்கு வாய்ப்பு அளித்த தங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* **கனம் திரு. எம். பக்தவத்சலம்** : கனம் துணைத் தலைவர் அவர்களே, இந்த விவாதத்தைத் துவக்கிய கனம் அங்கத்தினர் ஸ்ரீ சுந்தரம், மதுரையில் அமைக்கப்படவிருக்கும் பல்கலைக் கழகத்தில் நாடகக் கலை போதிய இடம் பெறவேண்டும் என்று கூறினார். இறுதியாகப் பேசிய கனம் அங்கத்தினர் ஸ்ரீ சாம்பசிவ ரெட்டியார் இந்தப் பல்கலைக்கழகத்தில் சிற்பக் கலையும் ஓவியக் கலையும் இடம் பெற வேண்டும் என்று சொன்னார். இதில் ஒன்றும் ஆட்சேபம் இருப்பதற்கில்லை. எந்த எந்தப் பாடங்களை போதிக்க வேண்டும், என்ன என்ன பாடங்களுக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பனவற்றை யெல்லாம், பல்கலைக்கழகம் அமைக்கப் பட்ட பிறகு கவனிக்க வேண்டும். "அஸ்ட்ராலஜி, அஸ்ட்ரானமி" முதலியவைகள் போதிக்கப்பட வேண்டும் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொன்னார். அவையெல்லாம் அவ்வளவு முக்கியம் என்று நான் சொல்ல முடியாது. இப்போதே 'அஸ்ட்ராலஜி'-யால் பலர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். 'அஸ்ட்ராலஜி' ஒரு சயன்ஸ். அதில் எனக்கு நம்பிக்கை இல்லை என்று நான் சொல்லவில்லை. சில பேர் தங்களிடமே ஒரு ஜோஸ்யரை வைத்துக்கொண்டு வருங்காலத்தில் என்ன கிடைக்கும் என்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பழக்கமெல்லாம் டில்லியில் அதிகமாக இருக்கிறது. இதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. முக்கியமாக, பல்கலைக்கழகத்தில் பல கலைகள் இருக்க வேண்டும். இங்கே தமிழ் முதன்மையான இடம் பெற வேண்டும் என்பதில் எனக்கு ஐயமில்லை. தமிழ் இங்கே போதிய இடம் பெற வேண்டும். மூன்று சங்கங்கள் வளர்ந்த மதுரை மிகப் பொருத்தமான இடம் என்பதால்தான் இந்தப் பல்கலைக் கழகத்தை அங்கே அமைக்க ஏற்பாடு செய்திருக்கிறோம்.

இந்தப் பல்கலைக்கழகத்திற்கு 'மதுரைத் தமிழ்ச் சங்கப் பல்கலைக்கழகம்' என்று பெயர் வைக்க வேண்டும் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ நடராஜன் சொன்னார். நாம் தமிழ்ச் சங்கத்தை மறப்போமா? அதை நாம் இத்தனை நாள் வரை மறக்கவில்லை,

4th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். அதை நாம் மறக்கக்கூடுமானால், அந்தப் பெயரை இதற்கு வைக்கவேண்டும். ஆக்ஸ்போர்டிலுள்ள பல்கலைக்கழகத்திற்கோ, கேம்பிரிட்ஜிலுள்ள பல்கலைக்கழகத்திற்கோ ஆங்கிலப் பல்கலைக்கழகம் என்று அங்குள்ளவர்கள் பெயர் வைத்திருக்கிறார்களா ? அமெரிக்காவிலுள்ள பல்கலைக்கழகங்களுக்கு இம்மாதிரியான பெயர்கள் வைக்கப்பட்டிருக்கின்றனவா? நாம் முக்கியமான விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டும்.

இந்தப் பல்கலைக்கழகத்தில் தமிழ் போதிய இடம் பெற வேண்டும் என்பதில் அபிப்பிராய பேதங்கள் இருக்க முடியாது. தமிழ் மட்டும் இருப்பது என்பது முடியாது. தமிழைப் படிப்பவர்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டது. சென்னையில் தேவஸ்தானங்கள் சார்பில் ஒரு தமிழ்க் கல்லூரி அமைக்கப்படவிருக்கிறது. என்னைக்கூட அது சம்பந்தப்பட்ட விழாவிற்கு அழைத்திருக்கிறார்கள். அங்கே தமிழை போதிக்கலாம். இது பல்கலைக் கழகம். இன்று உலகிலுள்ள உயர்ந்த அறிவை நமது இளைஞர்கள் பெற நாம் ஏற்பாடு செய்ய வேண்டும். மதுரையில் அமைக்கப்படவிருக்கும் புதிய பல்கலைக்கழகத்தில் புதிய திட்டங்கள் வரலாம். அங்கே சிற்சில பாடங்களில் விசேஷ கவனம் செலுத்தப்பட வேண்டும் என்பது என் விருப்பம். தமிழில் விசேஷ கவனமும் விசேஷ ஆராய்ச்சியும் அங்கே இருக்க வேண்டும். நாம் இப்போது புதிதாக விவசாயக் கல்லூரியை அமைத்திருக்கிறோம். 'கெமிகல் சயன்ஸ்'-ல் விசேஷ கவனம் செலுத்தலாம்.

நாடகம், ஓவியம் போன்றவற்றிலும் விசேஷ கவனம் செலுத்த வேண்டும். அமெரிக்காவிற்கு நான் சென்றிருந்தபோது நமது பல்கலைக்கழகத்தைப் போன்ற ஒரு பெரிய கட்டிடத்தை அங்கே பார்த்தேன். அது என்ன என்று அங்குள்ளவர்களிடம் கேட்டேன். அது "ஆர்க்கிடெக்சர்" கூடம் என்று அவர்கள் சொன்னார்கள். நாம் இந்த மாதிரியான விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டும். மதுரைப் பல்கலைக்கழகம் ஒரு புதிய பல்கலைக்கழகமாக இருக்க வேண்டும் என்று நானும் விரும்புகிறேன்.

இந்தப் பல்கலைக்கழகத்தில் பாடங்களை எந்த மொழியில் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பது பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பேராசிரியர்கள் கூட்டத்தில் நான் ஒன்று சொன்னேன். எப்பொழுதாவது ஆங்கிலம் மறைந்து வேறு ஒரு மொழி பல்கலைக்கழக பாடத்திட்டத்தில் வருமென்றால் அது தமிழாகத்தான் இருக்கும் ; வேறு எந்த மொழியாகவும் இருக்காது என்று உறுதியாகச் சொன்னேன். தமிழில்தான் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று திரு. சங்காலிங்கம் அவர்கள் சொன்னார்கள். தமிழில் என்ன பாடம் இருக்கிறதோ அந்தப் பாடம் தான் படிக்கவேண்டுமென்பது அவர்கள் சொன்னதில் உள்ள கருத்து. தமிழில் உயர்ந்த அறிவு நூல்களை செய்து கொண்டிருக்கிறோம். இதற்கு என்று ஒரு இலாகா அண்மையில் அமைத்திருக்கிறேன். அதில்

[திரு. எம். பக்தவத்சலம்] [4th August 1965

விசேஷ கவனம் செலுத்தவேண்டுமென்றும் அதிக தமிழ் நூல்கள் வரவேண்டுமென்றும் அரசாங்கம் அக்கறை செலுத்திவருகிறது. தமிழில்தான் சொல்லிக் கொடுக்கவேண்டுமென்று விரதம் எடுத்துக்கொண்டால் தமிழில் இருக்கிற புத்தகங்களைத்தான் படிக்கவேண்டும். தமிழுக்கு வேண்டிய ஆக்கம் அளிக்கிறோம். உற்சாக மிகுதியினால் இதையெல்லாம் பேசினால், அது அறிவு வளர்ச்சிக்கு உகந்ததல்ல. கம்பனைப்போல், திருவள்ளுவரைப்போல், இளங்கோவைப்போல் புலவர்களை கண்டதில்லை என்று அன்று பாரதியார் பாடினார். அப்போது இருந்தது அது. இந்தக் காலத்திற்கு வேண்டிய அறிவு எந்த நாட்டில் எந்த மொழியில் கிடைக்கிறதோ, எல்லாவற்றையும் நம் இளைஞர்கள் பெற வகை தேடவேண்டும். ஒரு தலைசிறந்த பல்கலைக் கழகமாக இது விளங்கவேண்டுமென்பதுதான் என்னுடைய அவா. தமிழில் சொல்லிக்கொடுக்கலாம். இந்தப் பல்கலைக்கழகத்தில் சொல்லிக் கொடுக்கவில்லையா? இவர்கள் எல்லாம் மாணவர்களை ஊக்குவிக்கவேண்டும். தமிழில் படிக்கச் சொல்லவேண்டும். அதற்கான வசதிகளைப் பெருக்கவேண்டும். உயர்ந்த அறிவை பல்கலைக் கழகம் அளிக்க வேண்டும். அதில்தான் நாம் கவனம் செலுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம். மதுரை பல்கலைக் கழகம் என்ற பெயரைவிட வேறு சிறந்த பெயர் இருக்கமுடியாது. இதற்கு நான்கு மாவட்டங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. நான்கு மாவட்டங்கள் இருந்தால் போதுமா என்று ஐயம் தெரிவித்தார்கள். இப்போது வேண்டாமென்று சொல்லவில்லை. கனம் உறுப்பினர் திரு. அப்துல் வகாப் அவர்கள் சொல்லியது போல திருச்சியில் பல்கலைக்கழகம் ஒன்று அமைக்க முடிந்தால் நல்லதுதான். உடனடியாக நாம் அதை எதிர்பார்ப்பதற்கில்லை. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட எதிர்ப்பார்ப்பதற்கில்லை. யுனிவர்சிட்டி சென்டர் வளர்ச்சி அடையவேண்டும். மதுரையில் யுனிவர்சிட்டி சென்டர் பல்கலைக்கழகம் அமைக்க வேண்டிய நிலையை அடைந்திருக்கிறது. ஆகையால் திருச்சியில் அதைப்பற்றி பிறகு யோசிக்கலாம். நான்கு மாவட்டங்கள் மட்டுமா என்றால் அது ஒன்றும் குறைவு இல்லை. அதுவே சிறந்த பல்கலைக்கழகமாக விளங்கமுடியும். பல்கலைக்கழக 'அட்டானமி' பற்றி சொன்னார்கள். உண்மை. அதை நான் முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். அட்டானமி என்றால் என்ன? அரசாங்கத்தோடு சண்டை போட்டுக்கொண்டிருப்பது தான் அட்டானமியா? அரசாங்கம் சொன்னால் அதற்கு நேர்மாறாக செய்வது தான் அட்டானமியா? அரசாங்கத்துடன் சண்டைபோட்டால் கட்சி கட்டிக்கொண்டிருந்தால் அதுதான் அட்டானமி என்று நினைக்கிறார்கள். அரசாங்கத்துக்கு மட்டும் என்ன எண்ணம்? ஜனநாயக முறையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சி நடத்துவது அரசாங்கம். பல்கலைக்கழகம் என்றால் எது வேண்டுமென்றாலும் செய்யலாம் என்று அர்த்தமில்லை. நாடு சுதந்திரம் அடைந்திருக்கிறதென்றால் அதில் மனிதனுடைய சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட்டுத்தான் இருக்கிறது. இதையெல்லாம் மிகைப்

4th August 1965] *[திரு. எம். பக்தவத்சலம்]*

படுத்தி சொல்லிக்கொண்டு போவதில் அர்த்தமில்லை. வைஸ் சான்சலர் நியமனம்பற்றி குறிப்பிட்டார்கள். கனம் உறுப்பினர் ஹாண்டே அவர்கள் சொன்னார்கள். அரசாங்கத்தினுடைய தலையீடு வந்துவிடுமே என்றார்கள். ஏன் வருகிறது? கல்லூரி என்றால் சரி. அதில் கல்வி அதிகாரி மூலமாகத் தலையிடுவார்கள். இப்போது என்ன? பல்கலைக்கழகத்தில் தலையிட வேண்டுமென்றால் அது தலையிடத்தான் வேண்டியிருக்கிறது. மக்களிடம் அரசாங்கத்திற்கு அக்கறை இல்லையா? எப்படியாவது போகட்டும் என்று விட முடியுமா? வைஸ்-சான்சலர் தேர்ந்தெடுக்கும் முறைபற்றி சொன்னார்கள். தகுதியுடையவர்கள்தான் வைஸ்-சான்சலராக வருவார்கள். யாருக்கும் உத்தியோகம் கொடுப்பதற்காக வைஸ்-சான்சலர் பதவி இல்லை. வைஸ்-சான்சலர் சிறந்த கல்வி நிபுணராக இருக்கவேண்டும். நான் அதைக் கண்டிப்பாக வற்புறுத்துவேன். வைஸ்-சான்சலருக்கு அரசியல் கூடாதா? அரசியல் உணர்ச்சி இல்லாதவர்களிடத்தில் எனக்கு மதிப்பே இருப்பதில்லை. அரசியல் உணர்ச்சியே இல்லையென்றால் அவர் எப்படி வைஸ்-சான்சலருக்கு லாயக்காவார்? கண்ணை மூடிக்கொண்டு, தான் சிறந்த கல்வி நிபுணர் என்று நினைத்துக் கொண்டிருந்தால், அவரை சிறந்த வைஸ்-சான்சலராக நினைக்க முடியாது. சிறந்த நிபுணராகவும் இருக்கவேண்டும். அரசியல் உணர்ச்சியும் வேண்டும். ஆனால் அரசியலை அதில் புகுத்தக் கூடாது. அரசியலுக்கு வேறு இடமிருக்கிறது. பல்கலைக் கழகம் என்பது புனிதமானது. ஆலயத்திற்குள்ளே போகிறவர்கள் பாதரட்சையை வெளியில் கழற்றி வைத்துவிட்டுப் போவது போல இதில் நுழைய வேண்டும். அரசியல் அங்கு கண்டிப்பாகக் கூடாது. நாட்டு பற்று இல்லாதவர்களை வைஸ்-சான்சலராக வைத்து என்ன பயன்? நாட்டின் ஒற்றுமையில், நாட்டின் ஒருமைப்பாட்டில், தேசியத்தில் நம்பிக்கை இல்லை என்றால் அப்பேர்ப்பட்டவரை வைஸ்-சான்சலராக வைக்க எதற்காக இந்தப் பல்கலைக்கழகம்? மாணவர்களையும் அந்த வகையில் அவர்கள் பக்குவப்படுத்தவா? மாணவர்களுக்கு உயர்ந்த உணர்ச்சிகள் வேண்டாமா? தலைமை வகிப்பதற்குத் தகுதியான உணர்ச்சி வேண்டாமா? ஸ்ரீ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இதைப் பற்றி சொன்னார்கள் நிர்வாகத்தை நடத்துவதற்கு என்று தனி பாடம் கிடையாது. **Humanities** -ஐ நாம் அலட்சியம் செய்யக்கூடாது, என்பதை ஏற்றுக்கொள்கிறேன். **Humanities** -ஐ அலட்சியம் செய்து விஞ்ஞானத்தை மட்டும் படித்தால் அதில் மனித உணர்ச்சி போய்விடும். அது அழிவுக்குத்தான் போகும். இப்போது கூட மாணவர்கள் ஆவேசம் வந்து அழிவில் ஈடுபடுகிறார்களே, அதற்கு என்ன காரணம்? நாட்டுப் பற்று இல்லாமல் நாட்டு சரித்திரம் தெரியாமல் இருந்தால் என்ன ஆவது? வெறும் விஞ்ஞானம் படித்து என்ன பயன்? அது அழிவுக்குத்தான் பயன்படும். கனம் அங்கத்தினர் தியாகராஜன் அவர்கள் நகர மன்றத்திற்கு பிரதிநிதித்துவம், முன்பு ஜில்லா போர்டுக்கு இருந்த மாதிரி கொடுக்கவேண்டுமென்றார்கள். செலக்ட் கமிட்டியில் ஒப்புக்கொண்டால் அதைச் செய்யலாம். ஜில்லாவில் உள்ள முனிசிபாலிடிகளுக்கு கேட்கலாம். பஞ்சாயத்து யூனியன்

5–50 p.m.

களுக்கு எல்லாம் சேர்த்துக் கொடுப்பதென்றால் அதிகமாகப் போய்விடும். அது சரியல்ல. முக்கியமான பிரதிநிதித்துவம் அளிப்பது அவசியம் என்று நான் உணர்கிறேன். இன்று அங்கத்தினர்கள் எல்லாம் மிகுந்த உற்சாகத்தோடும் நம்பிக்கையோடும் மனப்பூர்வமாகவும் இந்தப் பல்கலைக்கழகத்தை வரவேற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்குரிய வகையில் பல்கலைக்கழகம் போதிய ஆதரவு பெற்று சிறந்த பல்கலைக்கழகமாக விளங்குமென்று நான் நம்புகிறேன். இப்போது நான் வேறு மன்றத்தில் கூட தெரிவித்தேன். பல்கலைக்கழகம் தொடங்குவதற்கு இன்றைக்குச் சட்டம் இயற்ற முன்வந்திருக்கிறோம். பிறகு பூர்வாங்க வேலைகள் எடுத்துக்கொள்ளப்படும். பூர்வாங்க வேலைகள் எடுத்துக் கொள்வதற்கு முன்பு பொதுவிலே சில எண்டோமெண்டுகள் நன்கொடைகள் வேண்டியிருக்கும். நிதி பெற்றுள்ள தர்ம ஸ்தாபனங்கள் இதற்கு முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அந்த மன்றத்தில் சொன்னேன், முருகன் ஞானபண்டிதன் என்று சொல்லக்கூடியவன், அங்குள்ள அவனுடைய ஆலயங்கள் நிதியளிக்கலாம். மதுரை மாவட்டத்திலும் திருநெல்வேலி மாவட்டத்திலும் ஆலயங்கள் இருக்கின்றன. ராமேஸ்வரம் தேவஸ்தானம் ஓரளவு நிதி அளிக்கலாம். கன்னியாகுமரி தேவஸ்தானம் நிதி தரலாம். இதேபோன்று தொழில் அதிபர்கள் தர்ம ஸ்தாபனம் வைத்து நடத்துகிறவர்கள் எல்லாம் அதற்கு முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

வைஸ்-சான்சலரை எப்படித் தேர்ந்தெடுப்பது? அரசாங்கத்தைச் சேர்ந்தவராக இருப்பாரா என்றார்கள். தேர்தலில் விட்டால் மட்டும் எப்படி நடக்கும்? ஜனநாயகம் நல்லமுறையில் தான் நடக்கிறது. பஞ்சாயத்து யூனியன் தேர்தல் பற்றி அறிவோம். நல்ல முறையில் நடந்ததற்காக பெருமைப்படுகிறேன். தேர்தல் வைத்து 'கான்வாஸ்' செய்ய ஆரம்பித்தால் தகுதியுள்ளவர்கள் வரமுடியுமா? வைஸ்-சான்ஸலர் என்றால் சிறந்த **Educationist** நிபுணர் ஆகவும் தமிழ்ப்பற்று, தேசப்பற்று, பரிபூரணமாக உள்ளவராகவும் இருக்கவேண்டும். அகண்ட மனப்பான்மை வேண்டும். குறுகிய நோக்கம் கூடாது. இதைக் கண்டுபிடிப்பது கஷ்டமில்லை. தேர்தலில் இது வராது. அதில் போட்டிபோடலாம். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தை எடுத்துக்கொள்ளுங்கள். தேர்தல் இல்லை. இதுவரை தவறுதலாக அங்கிருந்தவர்கள் யாரைப்பற்றி யாவது சொல்லமுடியுமா? ஏன் இந்த அச்சம், ஐயம்? அப்படிச் சொல்வது ஒரு 'பாஷனாகப்' போய்விட்டது. அரசாங்கத்துக்கு வேண்டியவர்கள் என்றால் என்ன அர்த்தம்? அரசாங்கத்துக்கு தகுதிதான் வேண்டும். ரிஜிஸ்ட்ரார் 5 ஆண்டுகளுக்கு இருந்தால் நல்லது என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ. ராஜா அய்யர் அவர்கள் சொன்னார்கள். ஸெலக்ட் கமிட்டி அதை யோசனை செய்யலாம். ரொம்ப தகுதியுள்ளவர்களைப் பார்த்துத்தான் போடுவோம். அரசாங்கம் அதில் கவனம் செலுத்தும். ஆகவே எல்லோருமே இதை மனப்பூர்வமாக வரவேற்றிருக்கிறார்கள். ஸெலக்ட் கமிட்டி

4th August 1965] *[திரு. எம். பக்தவத்சலம்]*

*யில் வேண்டிய திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டு, சீக்கிரத்தில் இது சட்டமாக்கப்பட்டு, சீக்கிரத்திலே மதுரை பல்கலைக்கழகம் துவங்கி சீரிய வகையில் வளரும் என்ற நம்பிக்கையோடு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.*

DEPUTY CHAIRMAN : The question is—

"That this House concurs with the Assembly in setting up a Joint Select Committee of both the Houses consisting of 18 Members (12 Members of the Legislative Assembly and 6 Members of the Legislative Council) to consider the Madurai University Bill, 1965 (L.A. Bill No. 11 of 1965) and that the following Members of this House be selected to serve on such a Joint Select Committee :—

THE HON. SRI R. Venkataraman,
DR. A. Lakshmanaswami Mudaliar,
SRI K. Balasubramanya Ayyar,
SRI S. Jayarama Reddiar,
SRI K. Anbazhagan, and
SRI K. Rajaram

The motion was put and carried.

DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again to-morrow at 3 p.m. 5–55 p.m.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

*161 *Notification issued with G.O. P. No. 960, Revenue, dated 20th March 1965, regarding delegation of powers to certain officers under the Madras (Transferred Territory) Ryotwari Settlement Act, 1964. [Laid on the Table of the House under section 26 (2) of the Madras (Transferred Territory) Ryotwari Settlement Act, 1964 (Madras Act 30 of 1964).]*

*162 *Notification issued with G.O. P. No. 853, Revenue, dated 17th March 1965, making rules for the Madras (Transferred Territory) Janmikaram Payment Abolition Act, 1964. [Laid on the Table of the House under section 34 (5) of the Madras (Transferred Territory) Janmikaram Payment Abolition Act, 1964 (Madras Act 39 of 1964.)]*

*163 *Notification issued with G.O. Ms. No. 1885, Revenue, dated 19th June 1965, exempting Sri Thirukuttalanathaswamy Devasthanam, Courtallam, Tenkasi taluk, Tirunelveli district, from the operation of section 34 of the Hindu Religious and Charitable Endowments Act, 1959. [Laid on the Table of the House under section 116 (3) of the Hindu Religious and Charitable Endowments Act, 1959 (Madras Act 22 of 1959.)]*